

யுகியோ சுகியா, 1904ம் ஆண்டு ஜப்பானில் பிறந்தவர். சிறந்த சிறுவர் இலக்கிய எழுத்தாளர். 150 க்கும் அதிகமான புத்தகங்களை எழுதியவர். 1951 ம் ஆண்டு இவர் எழுதிய 'அன்புக்குரிய யானைகள்', போருக்கு எதிரான உண்மைகளையும், விலங்கு வதைக்கு எதிரான செய்திகளையும் குழந்தைகளுக்குச் சொல்லும் மிகச் சிறந்த படைப்பு ஆகும்.

ஜப்பான் உயிரியல் பூங்கா ஒன்றின் மூன்று யானைகளின் உண்மை வரலாறு. டோக்கியோ நகரில் அணுகுண்டு வீசப்பட்டபோது, உயிரியல் பூங்காவுக்குச் சொந்தமான ஜான், டோக்கி, வான்லி ஆகிய யானைகள் விஷம் கொடுத்துக் கொல்லப்பட்டன. கடைசி மூச்சை நிறுத்தப்போகிற நேரத்திலும் தாங்கள் கற்றுக்கொண்ட 'பன்ஷாய்' வித்தையை செய்து காண்பித்தபடி உயிர்விட்டன என்ற கதையைக் கேட்பவர்கள் கண்களில் கண்ணீர் கசியாமல் இருக்க முடியாது. தெரிந்தோ தெரியாமலோ பல நூற்றாண்டுகளாய் நம்மை சுற்றி இருக்கும் விலங்கினங்களை தினந்தோறும் தண்டித்துக் கொண்டிருக்கிறோம். இந்தக் கதையை வாசிக்கும் சிறுவர்கள் விலங்குகள் வதைக்கு எதிராக குரல் எழுப்புவார்கள் என்ற நம்பிக்கை எமக்கும் எழுகிறது.

thamizhbooks.com பாரதி புத்தகாலயம் புதிய புத்தகம் பேசுது

₹ 30/-




BOOKS FOR CHILDREN

உலகப் புகழ்பெற்ற சிறார் சித்திரக்கதை




# அன்புக்குரிய யானைகள்

யுகியோ சுசியா

தமிழில்: கொ.மா.கோ.இளங்கோ



FAITHFUL ELEPHANTS

**YUKIO TSUCHIYA**

BOOKS FOR CHILDREN

# அன்புக்குரிய யானைகள்

**FAITHFUL ELEPHANTS**

YUKIO TSUCHIYA

**யுகியோ சுசியா**

தமிழில்: **கொ.மா.கோ.இளங்கோ**



**ANBUKKURIYA YANAIKAL?** (In Tamil)
**English Original : FAITHFUL ELEPHANTS**
**YUKIO TSUCHIYA**
Tamil Translation: **Ko Ma. Ko. Elango**
**Illustration: Avinash Deshpande**
First Published: November, 2017
Thanks to: BGVS
**Published by**
**BOOKS FOR CHILDREN**
*im print of Bharathi Puthakalayam*
7,Elango Salai, Teynampet, Chennai - 600 018
Email: thamizhbooks@gmail.com | www.thamizhbooks.com

அன்புக்குரிய யானைகள்
யுகியோ சுசியா
தமிழில்: கொ.மா.கோ. இளங்கோ
ஓவியம்: அவினாஸ் தேஷ்பாண்டே
*முதல் பதிப்பு: நவம்பர், 2017*
வெளியீடு:



புக்ஸ் ஃபார் சில்ரன்
*பாரதி புத்தகாலயத்தின் ஓர் அங்கம்*
*7, இளங்கோ சாலை, தேனாம்பேட்டை, சென்னை - 600 018*
*தொலைபேசி : 044 24332424, 24332924, 24356935*

விற்பனை உரிமை

பாரதி

**விற்பனை உரிமை**
**திருவல்லிக்கேணி:** 48, தேரடி தெரு | **பெரம்பூர்:** 52, கூக்ஸ் ரோடு
**வடபழனி:** பேருந்து நிலையம் எதிரில் அடையார் ஆனந்தபவன் மாடியில்
**ஈரோடு:** 39, ஸ்டேட் பாங்க் சாலை | **திண்டுக்கல்:** பேருந்து நிலையம்
**நாகை:** 1, ஆரியபத்திரபிள்ளை தெரு | **திருப்பூர்:** 447, அவினாசி சாலை
**திருவாரூர்:** 35, நேதாஜி சாலை | **சேலம்:** பாலம் 35, அத்வைத ஆஸ்ரமம் சாலை,
**சேலம்:** 15, வித்யாலயா சாலை | கரூர்: நாரத கானசபா அருகில் (Near TNGEA - Office )
**அருப்புக்கோட்டை:** 31, அகமுடையார் மகால் | **நெய்வேலி:** சி.ஐ.டி.யூ அலுவலகம்,
**மதுரை:** 37A, பெரியார் பேருந்து நிலையம் | **மதுரை:** சர்வோதயா மெயின்ரோடு,
**குன்னூர்:** N.K.N வணிகவளாகம் பெட்போர்ட் | **செங்கற்பட்டு:**1 டி., ஜி.எஸ்.டி சாலை
**விழுப்புரம்:** 26/1, பவானி தெரு | **திருநெல்வேலி:** 25A, ராஜேந்திரநகர், பாளையங்கோட்டை
**விருதுநகர்:** 131, கச்சேரி சாலை | **கும்பகோணம்:** ரயில் நிலையம் அருகில்
**வேலூர்:** S.P. Plaza 264, பேஸ் மிமி , சத்துவாச்சாரி | பேருந்து நிலையம் அருகில்,
**தஞ்சாவூர்:** காந்திஜி வணிக வளாகம் காந்திஜி சாலை | **விருதாசலம்:** 511A, ஆலடி ரோடு
**திருச்சி:** வெண்மணி இல்லம், கரூர் புறவழிச்சாலை | **பழனி:** பேருந்து நிலையம்
**தேனி:** 12,பி, மீனாட்சி அம்மாள் சந்து, இடமால் தெரு | **கோவை:** 77, மசக்காளிபாளையம் ரோடு, பீளமேடு | **தி.மலை:** முத்தம்மாள் நகர், | **நாகர்கோவில்:** 699, கே.பி.ரோடு, ஆர்.வி.புரம், 94434 50111
**சிதம்பரம்:** 22A/ 18B தேரடி கடைத் தெரு, கீழவீதி அருகில்

*நினைத்த நூல்கள்... நினைத்த நேரத்தில்...*
thamizhbooks.com 9444960935

ரு.30/
அச்சு : கணபதி எண்டர்பிரைசஸ், சென்னை-02




ஜப்பான் நாட்டின், யுனோ உயிரியல் பூங்காவில்
உள்ள செர்ரி மரங்களில் பூக்கள் பூத்துக்குலுங்கின.
இதமான காற்று வீசியதால் செர்ரி பூக்கள்
நிலத்தில் உதிர்ந்தபடி இருந்தன.
சூரிய ஒளி பட்டு, பூ இதழ்கள் பிரகாசமாக மின்னின.
அன்று விடுமுறை நாள்.
பொதுமக்கள் நிறையப்பேர் திரண்டிருந்தார்கள்.
செர்ரி மரங்களுக்கு அடியில் கூடியிருந்த மக்கள்,
உயிரியல் பூங்காவில் நுழைவதற்குப்
போட்டி போட்டுக்கொண்டிருந்தார்கள்.

The cherry blossoms are in full bloom at the Ueno Zoo. Their petals are falling in the soft breeze and sparkling in the sun. Beneath the cherry trees, crowds of people are pushing to enter the zoo on such a beautiful day.



நடுக்கூடத்துக்கு வந்த இரண்டு யானைகள்,
பார்வையாளர்களை மகிழ்விப்பதற்காக சில
வித்தைகளை செய்து காண்பித்தன. பெரிய மரப்
பலகைகளுக்கு மேலே நடந்து சென்ற யானைகள்,
நீளமான தந்தங்களில்
குழல் வாத்தியக் கருவியைப் பிடித்திருந்தன.
வாத்திய இசையை வாசித்துக் காட்டின.

Two elephants are outside performing their tricks for a lively audience. While blowing the trumpets with their long trunks the elephants walk along large wooden logs.





அந்த சதுக்கத்திற்கு அருகில் ஒரு கல்லறை இருந்தது.
யுனோ உயிரியல் பூங்காவில், இறந்த விலங்குகளின்
நினைவாக எழுப்பப்பட்டுள்ள நினைவுச்சின்னத்தை,
அங்கு கூடியிருந்த பலர் கவனிக்கவில்லை.
அங்கே, பெரும் அமைதி நிலவியது. சூரியனின்
வெப்பம் எல்லா மூலையிலும் விழுந்துகொண்டிருந்தது.

Not far from the cheerful square, there stands a tombstone. Not many notice this monument for the animals that have died at the Ueno Zoo.
It is quiet and peaceful here,
and the sun warms every corner.



ஒரு நாள், உயிரியல் பூங்கா ஊழியர் ஒருவர்,
நினைவுச் சின்னமான கல்லை துடைத்து
மெருகூட்டிக்கொண்டிருந்தார்.
அதே கல்லறையில், மூன்று யானைகள்
புதைக்கப்பட்ட சோகமான
கதையை என்னிடம் சொன்னார்.

One day, an employee of the zoo,
while tenderly polishing the stone,
told me the sad story of three
elephants buried there.







அவர் சொன்னார்: "யுனோ உயிரியல் பூங்காவில்
இப்போது மூன்று யானைகள் உள்ளன.
ஆனால் பல ஆண்டுகளுக்கு முன்பு,
இவற்றைப் போலவே வேறு யானைகள் மூன்று
இருந்தன. அந்த யானைகளின் பெயர் ஜான்,
டோன்கி, வான்லி ஆகும். அந்த நேரத்தில்,
ஜப்பானில் போர் நடந்துகொண்டிருந்தது.
ஜப்பானுக்கு எதிராக தொடுக்கப்பட்ட போர்
படிப்படியாக தீவிரமடைந்தது. தினமும்,
டோக்கியோ நகரின்மீது
இரவு பகல் பாராமல் குண்டுகள் வீசப்பட்டன.
அதைப் பார்ப்பதற்கு குண்டு மழை
பெய்வதைப்போல காட்சியளித்தது."

He said today there are three elephants in this zoo.
But years ago, we had three different elephants here.
Their names were John, Tonky and Wanly.
At that time, Japan was at war.
Gradually, the war had become more and more severe.
Bombs were dropped on Tokyo
every day and night, like falling rain.



குண்டுகள், உயிரியல் பூங்காவில் விழுந்தால்
என்னவாகும்? இரும்புக் கூண்டுகள் உடைந்து,
அதிலுள்ள விலங்குகள் காட்டுக்குள் தப்பியோட
வழிதேடி, நகருக்குள் நுழைந்துவிடும்.
அது, ஆபத்தில் போய் முடியும்.
ஆகவே, இராணுவத்தின் கட்டளையை ஏற்று
அங்கிருந்த சிங்கங்கள், புலிகள், சிறுத்தைப்புலிகள்,
கரடிகள், பாம்புகள் போன்ற விலங்குகள்
விஷம் ஏற்றிக் கொல்லப்பட்டன.

What would happen if the bombs hit the zoo?
If the cages were broken and dangerous animals
escaped to run wild through the city,
it would be terrible! Therefore,
by command of the Army, all the lions, tigers, leopards,
bears and big snakes were poisoned to death.





கடைசியில், மூன்று யானைகள்
கொல்லப்பட வேண்டிய நேரம் வந்தது.
அதிகாரிகள், அந்த முயற்சியை ஜான்
யானையிடமிருந்து ஆரம்பித்தார்கள்.
ஜான், உருளைக்கிழங்குகளை விரும்பிச் சாப்பிடும்.
அங்கிருந்த யானைக் காப்பாளர்,
விஷம் கலந்த உருளைக்கிழங்குகளை,
நல்ல கிழங்குகளுடன் சேர்த்து
யானைக்குச் சாப்பிடத் தந்தார்.

By and by, the came time for
the three elephants to be killed.
They began with John. John loved potatoes,
so the elephant keeper mixed poisoned potatoes with the
good ones when it was time to feed him.



ஜான், மிகவும் புத்திசாலி யானை.
அது, நல்ல உருளைக்கிழங்குகளை மட்டுமே சாப்பிட்டது. ஆனால், ஒவ்வொரு தடவையும் நச்சு கலந்த உருளைக்கிழங்குகளை துதிக்கையில் எடுத்து, வாயருகே கொண்டு சென்றவுடன் புரிந்துகொண்டது. உடனடியாக அவற்றைத் தரையில் வீசி எறிந்தது.

John, however, was a very clever elephant.
He ate the good potatoes,
but each time he brought a poisoned
potato to his mouth with his trunk,
he threw it to the ground.



வறு வழியே இல்லை என தோன்றுகிறது,"
ன்று உயிரியல் பூங்கா அதிகாரி சொன்னார்:
, ஜானின் உடம்பில் ஊசியின் மூலம் நேரடியாக விஷத்தைச் செலுத்த வேண்டும்." என்றார்.

"As it seems there is no other way,"
the zoo keeper said,
"we must inject poison
directly into his body."



உடனே ஒரு பெரிய ஊசி கொண்டுவரப்பட்டது.
அதே ஊசிகளை வைத்துத்தான் குதிரைகள்
கொல்லப்பட்டன. ஆனால், ஜானின் தோல்
மிகவும் கடினமாக இருந்தது. பெரிய ஊசிகள்
ஒவ்வொன்றாக 'டொப்' டொப்' வென்று
ஒடிந்து போயின. அந்த முயற்சி வீண் போனது.
அங்கிருந்த அதிகாரிகள், தயங்கித் தயங்கி
மற்றொரு முடிவுக்கு வந்தார்கள். யானைக்கு உணவு
தராமல் பசியோடு சாகடிக்க நினைத்தார்கள்.
பாவம் ஜான்! பதினேழு நாட்களுக்குப்
பிறகு இறந்து போனது.

A large syringe, the kind used to give shots to horses, was prepared. But John's skin was so tough that the big needles broke off with a loud snap, one after the other. When this did not work, the keepers reluctantly decided to starve him to death. Poor John died seventeen days later.





பிறகு, டோன்கியையும் வான்லியையும்
கொல்ல வேண்டிய நேரம் வந்தது.
அந்த இரு யானைகளின் அன்பு கலந்த பார்வை
பொதுமக்களை ஈர்த்திருந்தது. அவை மென்மையான
இதயம் படைத்தவையாக இருந்தன.

Then it was Tonky's and Wanly's turn to die. These two had always gazed at people with loving eyes. They were sweet and gentle-hearted.



உயிரியல் பூங்கா அதிகாரிகள், டோன்கியையும் வான்லியையும் உயிருடன் பிழைக்க வைப்பதில் ஆர்வம் காட்டினார்கள். அந்த யானைகளை, டோக்கியோவிற்கு வடக்கே சென்டாய் நகரில் உள்ள உயிரியல் பூங்காவுக்கு அனுப்பிவைக்க நினைத்தார்கள்.

The zoo keepers wanted so much to keep Tonky and Wanly alive that they thought of sending them to the zoo in Sendai, far north of Tokyo.





ஆனால், சென்டாய் நகரின் மீது குண்டுகள் விழுந்தால் என்ன ஆகும்? யானைகள் இரண்டும் உயிரியல் பூங்காவிலிருந்து தப்பித்து காட்டுக்குள் ஓடிவிட்டால் என்ன செய்வது? அதன் பிறகு என்ன நடக்கும்? அதிகாரிகள் குழம்பிப் போனார்கள் கடைசியில், டோன்கியையும் வான்லியையும் யுனோ உயிரியல் பூங்காவில் வைத்து மற்ற விலங்குகளைப்போல கொல்ல முடிவு செய்யப்பட்டது.

But what if bombs fell on Sendai?
What if the elephants got loose and ran wild there?
What would happen then?
Tonky and Wanly, too were doomed to be killed at the Ueno zoo, just like all the other animals.



யானைக் காப்பாளர், டோன்கிக்கும் வான்லிக்கும் உணவு தருவதை நிறுத்தி வைத்தார். நாட்கள் செல்லச் செல்ல, அந்த இரண்டு யானைகளும், உடல் மெலிந்து போயின. மிகவும் பலவீனமாகக் காணப்பட்டன. எப்போதாவது அந்தக் காப்பாளர்கள், அவை அடைபட்டிருந்த கூண்டைக் கடந்து செல்லும்போது, 'எங்களுக்கு சாப்பிட ஏதாவது கொடுங்கள், குடிக்கத் தண்ணீர் தந்து உதவுங்கள்.' என்று கெஞ்சுவதைப் போல் இரண்டு யானைகளும் தட்டுத்தடுமாறி எழுந்து நின்றன. யானைகள், அவரிடம் பிச்சை கேட்பதுபோலவே தெரிந்தது.

The elephant keepers stopped feeding Tonky and Wanly. As the days passed, the elephants became thinner and thinner, weaker and weaker. Whenever a keeper walked by their cage, they would stand up, tottering, as if to beg, 'Give us something to eat. Please, give us water!'





சுருங்கியும் தளர்ந்தும் போயிருந்த யானைகளின் முகத்தில், அன்பு நிறைந்த கண்கள் ஒரு ரப்பர் பந்தைப்போலத் தெரிகின்றன. காதுகள், கனத்த உடல் அமைப்புக்கு இணையாக இல்லாமல் மிகவும் பெரியதாகத் தெரிகின்றன. பலமும் உறுதியும் மிகுந்த யானைகளின் உருவம் உருக்குலைந்து போயிருந்தன.

Their small, loving eyes began to look like round rubber balls in their drooping, shrunken faces. Their ears seemed too large for their bodies. The one big, strong elephants had become a sad shape.



இது நாள் வரை, யானைப் பயிற்சியாளர் அவற்றை சொந்தப் பிள்ளைகளைப்போல நேசித்தார். ஆனால், இப்போது இரும்புக் கூண்டுகளுக்கு எதிரில் நின்றபடி யானைகளைப் பார்த்து புலம்பினார்.

"பாவம்! நீங்கள் இரக்கமுள்ள யானைகள்!"

ஒரு நாள், டோன்கியும், வான்லியும் தங்களது கனமான உடலைத் தூக்கி தட்டுத் தடுமாறி எழுந்து நின்றன. கூண்டுக்கு வெளியே இருந்த பயிற்சியாளர் பக்கத்தில் நெருங்கி வந்தன. மிச்சமுள்ள பலத்தைத் திரட்டி தங்களது கடைசி ஆசையை தெரியப்படுத்தின.

All this while, the elephants' trainer loved them as if they were his own children. He could only pace in front of the cage and moan, 'You poor, poor, pitiful elephants!' One day, Tonky and Wanly lifted their heavy bodies, staggered to their feet, and came close to their trainer. Squeezing out what little strength they had left, Tonky and Wanly made their last appeal.





இரண்டு யானைகளும், முதலில் பின்னங்கால்களின் உதவியால் எழுந்து நின்றன. இயன்ற அளவுக்கு முன்னங் கால்களை உயர்த்திக் காட்டின. பிறகு, துதிக்கையை தூக்கி பன்ஷாய் வித்தையை செய்து காட்டின. யானைப் பயிற்சியாளர், எப்போதும்போல உணவும் தண்ணீரும் தருவார் என்ற நம்பிக்கை வைத்திருந்தன.

They stood up on their hind legs and lifted their front legs up as high as they could. Then, raising their trunks high in the air, they did their banzai trick. Surely, their friend would reward them with food and water as he used to do.



பயிற்சியாளருக்கு யானைகளுக்கு எதிரில்
அமைதியாக நிற்க தைரியமில்லை.
"அன்புக்குரிய டோன்கி! அன்புக்குரிய வான்லி!"
என்று கூச்சலிட்டபடி உணவு அறைக்குள் ஓடினார்.
யானைகளுக்குத் தேவையான உணவையும்
ஒரு வாளி நிறையத் தண்ணீரும் கொண்டுவந்து
அவற்றின் கால் அருகில் வைத்தார்.

The trainer could stand it no longer.
'Oh, Tonky! Oh, Wanly! he wailed,
and dashed to the food shed.
He carried food and pails of water to them
and threw it at their feet.





யானைகளின் மெலிந்த கால்களுக்கு
அடியில் வந்து நின்றார்.
தேம்பித் தேம்பி அழுதபடி,
"இதோ, இந்த உணவைச் சாப்பிடுங்கள். தயவுசெய்து
தண்ணீர் குடித்து தாகம் தணித்துக்கொள்ளுங்கள்.
தேவையான அளவு தண்ணீர் குடியுங்கள்." என்றார்.

'Here!' he said, sobbing, and clung to their thin legs.
'Eat your food! Please drink.
Drink your water!'



உயிரியல் பூங்காவில் உள்ள மற்ற பயிற்சியாளர்கள் யானைப் பயிற்சியாளர் செய்ததைப் பார்த்து கண்டும் காணததுபோலப் பாசாங்கு செய்தார்கள்.
யாரும் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை.
உயிரியல் பூங்கா இயக்குனர், உதட்டைக் கடித்தபடியும் மேசையின் மேல்பகுதியில் கைதூக்கி அடித்துக் கோபத்தை வெளிக்காட்டினார்.

All of the other keepers pretended not to see what the trainer had done. No one said a word.
The director of the zoo just sat very still, biting his lip and gazing at the top of his desk.





யானைகளுக்கு யாரும் உணவு பரிமாறக்கூடாது என்பதுதான் பணியாளர்களுக்கு விடுக்கப்பட்ட கட்டளை. யாரும், யானைகளுக்குத் தண்ணீர் தரவும்கூடாது. அதேநேரம், எல்லோரும் அந்த யானைகள் இனி ஒரே ஒரு நாள் மட்டும் பிழைத்திருக்க வேண்டுமென்று பிரார்த்தனை செய்தார்கள். ஒரு நாள் தாமதித்தால் போர் முடிவடைந்து விடும். யானைகளை, எளிதில் காப்பாற்றி விடலாம் என்று நம்பினார்கள்.

No one was supposed to give the elephants any food.
No one was supposed to give them any water.
But everyone was hoping and praying that if the elephants could survive only one more day,
the war might be over and the elephants would be saved.



கடைசியில், டோன்கியாலும் வால்யாவாலும்
எழுந்து நடக்க முடியாத நிலைமை உருவானது.
அவை இரண்டும், ஒரு மூலையில் திரும்பிப்
படுத்துக்கொண்டன. உயிரியல் பூங்காவுக்கு மேலுள்ள
வானத்தில் மிதந்து செல்லும் வெண்மேகங்களை,
எப்போதும்போல யானைகளால் கண்களை உயர்த்திப்
பார்க்க முடியாமல் போனது. இருப்பினும், அவற்றின்
கண்கள் முன் எப்போதையும் விடத்
தெளிவாகவும் அழகாகவும் தெரிந்தன.

At last, Tonky and Wanly could not move.
They just lay on their sides, hardly able to see the white
clouds floating in the sky over the zoo.
However, their eyes appeared clearer
and more beautiful than ever.





அன்புக்குரிய யானைகள், கொடூரமாக இறந்து
போவதைப் பார்த்து, இதயம் உடைவதைப்போல
உணர்ந்தார் பயிற்சியாளர். யானைகளின்
நிலைமையைப் பார்க்க மனதில் திடம் இல்லாத
மற்ற பயிற்சியாளர்களும் அதைப்போலவே
உணர்ந்தார்கள். முடிவில், அவர்கள் எல்லோரும்
யானைக் கூண்டுக்கு அருகில்
செல்வதை நிறுத்திக்கொண்டார்கள்.

Seeing his beloved elephants dying this way,
the elephant trainer felt as if his heart would break.
He had no more courage to see them.
All of the other keepers felt the same,
and they too stayed away from the elephants' cage.



இரண்டு வாரங்களுக்குப் பிறகு, டோன்கியும்,
வான்லியும் இறந்து போயின. யானைகள் இரண்டும்,
இரும்புக் கூண்டின் தாழ்ப்பாளுக்கு எதிராகச் சாய்ந்தன.
யானைகள், துதிக்கைகளை காற்றில் உயர்த்திப்
பிடித்திருந்தன. கடைசியாக ஒரு தடவை,
தங்களுக்கு உணவளித்த பயிற்சியாளருக்கு
பன்ஷாய் வித்தை செய்து
காண்பித்தைப்போல படுத்துக் கிடந்தன.

Over two weeks later, Tonky and Wanly were dead.
Both died leaning against the bars of their cage with their
trunks stretched high in the air,
still trying to do their banzai trick for
the people who once fed them.





"யானைகள் இறந்துவிட்டன! இறந்து விட்டன!" என்று
கதறியபடி அலுவலகக் கட்டடத்திற்கு
ஓடிச் சென்றார் யானைப் பயிற்சியாளர்.
அவர், தலையைக் கவிழ்த்தி கைகளுக்கு நடுவில்
மறைத்துக்கொண்டு அழுதார்.
கை முட்டியை வைத்து மேசைமீது அடித்தார்.

'The elephants are dead! They're dead!' screamed the
elephant trainer as he ran into the office.
He buried his head in his arms and cried,
beating the desk top with his fist.



மீதமுள்ள விலங்குக் காப்பாளர்கள், யானைகள் இருந்த
இரும்புக் கூண்டுக்கு அருகில் ஓடினார்கள்.
தட்டுத் தடுமாறி உள்ளே நுழைந்தார்கள்.
டோன்கி, வான்லி ஆகிய இரண்டு யானைகளின்
மெலிந்த உடலைப் பிடித்து அசைத்தார்கள்.
அப்படி அசைத்துக் கொடுப்பதால், யானைகள்
உயிர் பெற்று எழுந்துவரும் என்று நினைத்தார்கள்.
அங்கிருந்த எல்லோரும், கண்ணீர் சிந்தி அழுதார்கள்.
பிறகு, யானைகளின் கால்களையும் துதிக்கையையும்
தொட்டுத் தடவிக் கொடுத்தார்கள்.

The rest of the zoo keepers ran to the elephants' cage
and stumbled in. They took hold of Tonky and Wanly's
thin bodies, as if to shake them back to life.
Everyone burst into tears,
then stroked the elephants' legs and trunks in sorrow.





அவர்களுக்கு மேலே, பிரகாசமான நீல நிற வானத்தில்,
எதிரிகளின் விமானங்கள் பயங்கரச் சத்தம்
எழுப்பியபடி திரும்பி வந்தன.
டோக்கியோ நகரின்மீது தொடர்ச்சியாக
வெடிகுண்டுகள் வீசப்பட்டன.
அப்போது, இறந்த யானைகளுக்கு அருகில் இருந்த
உயிரியல் பூங்காவின் காப்பாளர்கள்,
கைகளை வானத்தை நோக்கி உயர்த்திக் காண்பித்து,
"போரை நிறுத்துங்கள்! போரை நிறுத்துங்கள்!"
என்று கெஞ்சிக் கேட்டார்கள்.

Above them, in the bright blue sky,
the angry roar of enemy planes returned.
Bombs began to drop on Tokyo once more.
Still clinging to the elephants,
the zoo keepers raised their fists to the sky
and implored, 'Stop the war! Stop all wars !'



கடைசியில், யானைகளின் உடல் பரிசோதிக்கப்பட்டன.
கழுவுத் தொட்டி போன்றிருந்த அவற்றின்
வயிறு காலியாகிக் கிடந்தன.
ஒரு சொட்டுத் தண்ணீர்கூட இல்லை.

Later, when the bodies of the elephants were examined nothing was found in their washtub like stomachs - not even one drop of water.







கண்களில் கண்ணீர் ததும்பப் பேசிய
உயிரியல் பூங்கா காப்பாளர்,
கதையைச் சொல்லி முடித்தார்.
"ஜான், டோன்கி, வான்லி ஆகிய மூன்று யானைகள்
இந்த நினைவுச் சின்னத்தின் கீழே
அமைதியாக ஓய்வெடுக்கின்றன." என்றார்.

With tears in their eyes, the zoo keeper finished his story.
"These three elephants - John,
Tonky and Wanly - are now resting peacefully
under this monument."



அந்த ஊழியர், நினைவுச் சின்னமாக பதிக்கப்பட்ட
கல்லை மென்மையாக துடைத்துக்கொண்டிருந்தார்.
அதே நேரத்தில், கல்லறை மீது
பனித் திரளைப்போல செர்ரி பூக்கள்
உதிர்ந்து விழுந்தன.

He was still patting the tombstone
tenderly as the cherry blossoms
fell on the grave, like snowflakes.

